# மதிப்புரைகள்

---

## கலைமகள்-December '52-நந்தன-மார்கழி (பக்கம் 762)

### முருகவேள் பன்னிரு திருமுறை

அருணகிரிநாதப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய திருப்புகழ்ப் பாக்கள் பதினாறாயிரம் என்று சொல்வார்கள். இப்போது நமக்குக் கிடைப்பவை கிட்டத் தட்ட 1,3 0 பாடல்களே. இவற்றை ஊர் ஊராகச் சென்று தொகுத்து வெளியிட்டவர் வ. த. சுப்பிரமணிய பிள்ளை என்ற பெரியார். அவர் வெளியிட்டவற்றோடு வேறு சில திருப்புகழ்களையும் தேடிச் சேர்த்து அரிய உரைக் குறிப்புகள், விரிவான ஆராய்ச்சிக் குறிப்புகள் ஆகியவற்றோடு அவருடைய குமாரர் ஸ்ரீ. வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் மூன்று பாகமாக வெளியிட்டிருக்கிறார். இன்று திருப்புகழில் ஈடுபட்டுத் திருப்புகழ்ப் பாக்களைப் பாடும் மக்கள் யாவரும் இந்தக் குடும்பத்தினருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர்கள்.

ஸ்ரீ செங்கல்வராய பிள்ளையவர்கள் தமிழ் ஆராய்ச்சி மிக்கவர். அவர் இப்போது திருப்புகழுக்கு உரை எழுத முற்பட்டிருக்கிறார். பல காலமாகத் திருப்புகழில் ஆழ்ந்து ஆழ்ந்து இன்புற்றவராதலின் பல நுணுக்கமான குறிப்புகளை அவருடைய உரையிலே காணலாம். திருப்புகழ்ப் பாக்கள் எல்லாவற்றிற்கும் உரை எழுதிய பிறகு அவற்றை வெளி யிடுவதானால் அன்பர்கள் நெடுங் காலம் காத்திருக்க வேண்டும்." ஆகையால் இந்த உரையை ஒவ்வொரு பகுதியாக வெளியிடும் முயற்சியைச் சில அன்பர்கள் மேற்கொண்டிருக்கிறார்கள். இது மிகவும் பாராட்டுதற்குரிய செயல். இப்போது மூன்று பகுதிகள் வெளியாகி யிருக்கின்றன. ஒவ்வொரு பகுதியிலும் முப்பது முதல் நாற்பது திருப்புகழ் வரையில் இருக்கும். இடப் பக்கத்தில் மூலமும் வலப் பக்கத்தில் உரையுமாக அமைத்து வெளியிடுகிறார்கள் அடியிலே இன்றியமையாத குறிப்புகள் இருக்கின்றன. முருகன் அடியார்களும் தமிழன்பர்களும் இந்த முயற்சியை ஆதரித்தால் திருப்புகழ் உரை முழுவதையும் விரைவிலே புத்தக உருவத்தில் காணலாம். இறைவன் திருவருளாலும் அன்பர்களின் ஆதரவாலும் இந்த அரிய பெரிய பணி நிறைவேறும் என்றே நம்புகிறோம்.—ஜ.

**சித்தாந்தம் :** (சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளி யீடு) மலர்-25 ; இதழ்-12. நந்தன மார்கழி (டிசம்பர் '52)

" திருப்புகழ் பாசுரங்களுக்குத் தெளிவான உரை வகுக்கப் பட்டுள்ள அரிய நூல்.

* * *

**குமாரகுருபரன் :** மலர்-3 ; இதழ்-12 நந்தன-மார்கழித்திங்கள்.

**முருகவேள் பன்னிரு திருமுறை.** இத்திருப்பணி திருவருள் வழி எழுந்து இனிதே நடந்து வருகிறது. திருத்தணிகைப் பெரு மான் அருள் கொண்டு இப்பணியை ஏற்று நிற்பவர்கள், ஆற்றல் வாய்ந்த, சாவ்பகதூர், தணிகைமணி திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் M. A.

எவர்க்கும் எய்ப்பினில் வைப்பாம் இவ்வெளியீடு, தமிழ் நாட் டின் தவப்பயன் ஆகும். முன்னே வந்து எதிர்தோன்றும் முருகன் அருளை இவ்வழி எளிதிற் பெறலாம். சைவப் பெருமக்கள் அனை வரும் முன் பணம் செலுத்தி பெயர் பதிவு செய்து தமக்கும் சமயத் திற்கும் ஆக்கமும், ஆற்றுபவர்க்கு ஊக்கமும் அளிப்பார்களாக.

வாழி தமிழ் ! வாழிய சைவம் !! வாழியவே வையகமே !!!

* * *

**செந்தமிழ் :** (மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடு) தொகுதி-48 ; பகுதி-9-10. [பக்கம் 239]

**முருகவேள் பன்னிரு திருமுறை, உரையுடன் :** இங்கே குறித்த பன்னிருதிருமுறை, அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் முதலிய பிரபந்தங்களாகும். அவை முழுமையும் தெளிவாகவும் திருத்தமாகவும் வரையப்பெற்ற பதவுரை, பொழிப்புரை, குறிப்புரைகளோடு ஒவ்வொரு தொகுதியாக மாதந்தோறும்வெளிவருமென்று தெரிகிறது இதன் உரையாசிரியர் வழிவழியாகத் திருமுருகனுக்கு ஆட்பட்ட குலத்தி லுதித்தவர்; பொருட்செல்வத்தோடு அருட்செல்வமும் மிகப் படைத்தவர்; அருந்தமிழோடு ஆங்கிலமும் கற்ற புலமையாளரில் தலைமைசான்றவர், ஆகலின் இந்நற்பணியை ஆற்றவல்லவர் இவரை யன்றி இக்காலத்து எவருமிலர் எனின், அஃது இவரைப் புகழ்ந் துரைத்ததாகாமல் பொருளுரையாகவே அமைகின்றது. இத்தகைய பெரியாரால் இயற்றப்பெறும் இவ்வுரைநூல் முழுதும் பழுதற்றதாய் என்றும் நின்று நிலவுமென்பதில் ஐயமில்லை. தேவஸ்தானங்களும் மடாலயங்களும் போன்ற செல்வநிலையங்கள் மேற்கொள்ளவேண்டிய மிகப்பெரிய இந்நன்முயற்சியை, இதன் பதிப்பாளர் உலையா ஆக்கமொடு இடையூறின்றி இனிது நிறைவேற்ற முருகப்பிரான் திருவருள் முன்நிற்க வேண்டும்.

* * *

## ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

நந்தன ஸு, மார்கழி மீ, தொகுதி 32 பகுதி 12

'சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய, வந்த இரு வினைக்கு மாமருந்தாய' முருகப் பெருமானின் திருப்புகழ் நிதியைப் பன்னிரு திரு முறைகளாக வகுத்து உலகிற்கு வழங்கும் உத்தமப் பணியில் ஈடுபட்டுள்ள இப்பதிப்பாளர், உரையாசிரியர் இருவரது முயற்சியும் மிக மிகப் போற்றத் தக்கதாகும். அறிவுச் செல்வமும் பக்திச் செல்வமும் ஒருங்கே பெற்றுள்ள ஸ்ரீமான் தணிகைமணி வ. சு. செங்கல்வராயப் பிள்ளை அவர்கள் அப்பரம் பரைப் பணியை இயற்றும் தகுதி வாய்ந்தவர்; அவர்கள் எழுதி வரும் பொழிப்புரை, ஆராய்ச்சி முதலியன, மதிநுட்பத்தையும் பரந்த நூலறிவையும் புலப்படுத்தும் சான்று களாகின்றன. வித்தையோடு விநயமும் இணைந்து அருளை நாடும் ஆர்வமும் அமைந்து பொருள் சேர் புகழைப் பொலிவுற விளக்கும் ஊக்கமும் உந்திட அன்னார் இயற்றும் இப்பணி இடையூறின்றி இனிது நிறைவேறுவதாக. சொன்னோக்கும் பொருள் நோக்கும் தொடை நோக்கும் நடை நோக்கும் எந்நோக்கும் காண இலக்கியமாய் அமையும் திருப்புகழைப் பொருளுணர்ந்து ஓதிப் பொன்றாப் பயனைத் தமிழ் மக்கள் அடையும் வண்ணம் அன்பர்கள் பலரும் ஒல்லும் வாயெல்லாம் இப்பணிக்கு உதவியளிப்பாராக.

## பாரததேவி

நந்தன ஸு மார்கழிமீ 15உ (29-12-52)

"வேதம் வேண்டாம் சகல வித்தை வேண்டாம்.- கீத நாதம் வேண்டாம் ஞான நூல் வேண்டாம்.- ஆதி குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் தாள் போற்றுந் திருப்புகழைக் கேளீர்தினம்."

ஞானம் பெறலாம். நலம் பெறலாம். எந்நாளும் வானம் அரசாள் வரம் பெறலாம். மோனவீ டேறலாம். யானைக் கிளையான் திருப்புகழைக் கூறினார்க் காமே இக்கூறு."

என்ற பெருமையுடைய திருப்புகழிலிருந்து 25 பாடல்கள் இந் நூலில் சுத்தமாக அச்சிடப்பட்டு, ஒவ்வோரடிக்கு நேராக அதன்

உரை தரப்பட்டிருப்பது இதன் விசேஷ அம்சம். அரும்பத விளக்கமும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

"காலன் வரும்போது காட்சி பெற" என்ற மகுடந் தாங்கி வரும் முதல் திருமுறையின் 5 வது பாடல் தற்கால மக்களுக்குப் பெரிதும் பொருத்தமாக இருக்கும் வண்ணம் ஸ்ரீ அருணகிரிநாதர் பாடிச் சென்றார். அப்பாடலுக்கு உரையாசிரியர் எவ்வளவு அழகாகப் பொழிப்புரை கூறியிருக்கிறார் பாருங்கள்:—

* * *

பக்தி மார்க்கமே சிறந்த மதம் என்று பெரியோர்கள் கூறுகிறார்கள். அஞ்ஞானம், காமம், தாசிகளிடம் மோகம் என்ற பேய்களை விரட்டி, இறைவன் பாதார விந்தங்களை யடைய கல்லையும் உருக்கும் திருப்புகழின் கருத்தை யறிந்து பாராயணம் செய்வது நலல்து. ஆத்ம விடுதலைக்கும் பேரின்ப மடைவதற்கும் வழி காட்டும் இந்நூலை யாவரும் அறிந்து முழுமுதற் கடவுளைப் போற்றுவதற்குத் துணை புரிய முன்வந்துள்ள உரையாசிரியரையும், வெளியிடுபவரையும் தமிழ் நாடு கட்டாயம் ஆதரித்து, அவர்களின் சீரிய முயற்சி வெற்றி பெறுமாறு செய்தல் வேண்டும்.